உ

# எனதுயிர்த் தோழர்

சென்னை மாகாணத் தமிழ்ச்சங்க அமைச்சர்,
தமிழ்ப் பெரும்புலவர், சோதிட கணித வித்துவான்,
சந்திரசேகரப் பாவலர், ஆசிரியர்,
திருவாளர், டாக்டர்

## இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்

# வரலாறு

எழுதியவர்:
பத்தமடை ஆசிரியர், டாக்டர்
**பி. அருணாசலம் பிள்ளை**

முதற்பதிப்பு ஜூலை 1943

கணேசன் அச்சுக்கூடம், திருநெல்வேலிப் பாலம்.

BULLETIN NO. 1.

# The Mysore State Tamil Literary Conference, Bangalore.

## FIRST SESSION

---

The First Session of **The Mysore State Tamil Literary Coaference** will be held, in Bangalore unber the auspices of the **University Tamil Sangam,** Central College, during the ensuing X'mas holidays.

The objects of the Conference are the following:—

(a) To bring together all Tamil lovers and scholars in order to take stock of the various activities of such scholars in South India.

(b) To facilitate co-operation in Dravidian studies and research.

(c) To afford opportunities to scholars to give expression to their views on their respective subjects and to point out their difficulties experienced in the pursuit of their special branches of studies.

(d) To promote Social and intellectual intercourse among scholars.

(e) To encourage Traditional Learning

This Conference is the first of its kind proposed to be held under the auspices of the University Tamil Sangam. Mutual exchange of thought and personal contact with scholars are not only stimulating to further research, but have also a tendency [illegible] Conferences has [illegible]

# எனதுயிர்த்தோழர்

## டாக்டர்

## இ. மு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள்

## வரலாறு

### தோற்றுவாய்

நண்பர் திருவாளர் பிள்ளையவர்களை 1914 நவம்பர் முதல் நான் அறிவேன். இவர்கள் வரலாறு எல்லாரும் அறியும் தகுதியது; அதனால் கீழே மிகவும் சுருக்கமாக எழுதுகிறேன்.

### பிறப்பு

இளசை எனப்பெறும் எட்டையபுரம், நடுவிற்பட்டியில் கொல்லமாண்டு 1071 வைகாசிமீ 23உ (1896 ஜூன்மீ 6உ) புதன்கிழமை பகல் நாழிகை 23-க்குப் பூரட்டாதி நாளில் தமிழ்ப்புலவரும், சோதிட வித்துவானுமாகிய திருவாளர் சு. முத்துசாமிப்பிள்ளை யவர்களுக்கும் கோதை நாச்சியாரம்மாளுக்கும் மூன்றாவது குழந்தையாக இவர்கள் பிறந்தார்கள். தந்தையார் எட்டையபுரம் மன்னருடைய வேலையில் அமர்ந்திருந்ததோடு, தமது நண்பரும், தேசியகீதங்கள் பாடிய சுப்பிரமணிய பாரதியாரது தந்தையுமாகிய திருவாளர் சின்னச்சாமி ஐயரவர்களுடன் பெரிய வாணிகத்தலைவராகவும் இருந்தார்கள்; அவர்கள் 1900 வைகாசிமீ மறைந்துவிட்டபடியால் குடும்பப்பொறுப்பு முழுவதும் தாயார் மேலதாயிற்று. இவர்களுக்குத் தந்தையார் இட்டபெயர் சுப்பிரமணியன் என்பது, தாயார் வைத்த பெயர் சந்திரசேகரன் என்பது. இவர்களுடன் பிறந்த தம்பியார் திரு. இ. மு. அருணாசலம் பிள்ளையவர்கள், இப்போது நான்குநேரிப் போர்டு உயர் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராக இருப்பதோடு, சித்தவைத்தியராகவும் இருக்கிறார்கள்.

இவர்களுடைய பழைய ஊர் சங்கரநயினார்கோவில்; இவர்களது பாட்டனார் தான் எட்டையபுர வாழ்க்கையை மேற்கொண்டார்கள்.

## கல்வி

முதலாவது பாரம் முடியச் சீவில்லிபுத்தூர் இந்து உயர் பள்ளிக்கூடத்திலும் இரண்டாவது பாரத்தில் முற்பகுதி எட்டையபுரம் அரசர் உயர் பள்ளி, பிற்பகுதியில் மூன்று மாதங்கள் அருப்புக்கோட்டைச் சைவபானு சத்திரிய வித்தியா சாலையிலும், கடைசி இரண்டு மாதங்களும் மூன்றாவது பாரமும் சீவில்லிப்புத்தூர் சி. எம். எசு. உயர் பள்ளியிலும், நான்கு, ஐந்து, ஆறாவது பாரங்கள் எட்டையபுரம் அரசர் உயர் பள்ளியிலும் படித்து 1914 மார்ச்சுமீ பத்தாவது வகுப்பு (S. S. L. C.)த் தேர்வில் தேறியபின் இவர்கள் 1937ல் இண்டர்மீடியேட்டுத் தேர்வில் பகுதி ஒன்றும் இரண்டும் தேர்வு பெற்றார்கள்; சிதம்பரம் பண்டிதப் பயிற்சிக் கலாசாலையில் 1924 செப்டம்பர் முதல் 1925 ஏப்பிரல் வரை படித்து இரண்டாவது வகுப்பில் தேர்ந்திருக்கிறார்கள்.

## வேலை

சிறுபருவ முதலே கொண்டிருந்த விருப்பத்தின்படி 1914 நவம்பர் 11உ. முதல் 1921 சூலைமீ முடியப் பத்தமடை உயர் பள்ளியிலும், பின் 1928 சூன்மீ முடியக் கோவிற்பட்டிப் போர்டு உயர் பள்ளியிலும், அதன்பின் 1936 சூன்மீ வரை நான்குநேரிப் போர்டு உயர் பள்ளியிலும், பின்பு 1939 சூன்மீ வரை கடையநல்லூர்ப் போர்டு உயர் பள்ளியிலும், அதன்மேல் இதுவரை சங்கரநயினார் கோவிற் போர்டு உயர் பள்ளியிலும் தலைமைத் தமிழாசிரியராக இருந்து வருவதோடு இவர்கள் பத்தாவது வகுப்புக்கு மொழிபெயர்ப்பும் கற்பித்து வருகிறார்கள். கோவிற்பட்டியிலிருந்த உயர்திரு சாமி விருதை சிவஞான யோகியாரவர்களிடத்திற் சித்த வைத்தியம் பயின்று 1939 திசம்பர் 21உயில் சித்தவைத்தியராகப் பதிவுசெய்யப்பெற்றிருக்கிறார்கள். இவர்கள் 1920, 1930, 1937, 1938 ஆகிய நான்கு ஆண்டுகளில் எசு. எசு. எல். சி (S. S. L. C.)த் தேர்வில் துணைத்தேர்வாளராக இருந்திருக்கிறார்கள்.

## திருமணம்

இவர்களுக்கு 1092-ளு நளஹு கார்த்திகைமீ 15உ (29-11-1916) புதன்கிழமை திருமணம் எட்டையபுரத்தில் நடைபெற்றது; இவர்கள் மனைவியார் திரு. ஈசுரவடிவம்மாள். தலைக்குழந்தை மங்கையர்க்கரசி அட்சயஹு ஐப்பசிமீ 5உ பிறந்து பிரபவஹு புரட்டாசிமீ 3உ மறைந்தது. இரண்டாவது பெண் நீடூழி வாழி சிவகாமவல்லி 1106ளு புரட்டாசிமீ 9உயிலும், மூன்றாவது ஆண் நீடூழி வாழி முத்துசாமி 1111ளு மார்கழிமீ 8உயிலும் நான்காவது பெண் நீடூழிவாழி கோதையம்மாள் 1113ளு ஐப்பசிமீ 27உயிலும் ஐந்தாவது ஆண் நீடூழிவாழி சுந்தரமூர்த்தி 1118ளு புரட்டாசிமீ 1உயிலும் பிறந்து முழுநலமாக இருந்து வருகின்றனர்.

## சங்கங்கள்

எட்டையபுரத்தில் அரசர் உயர் பள்ளியிற் படித்துக்கொண்டிருந்தபோது 1912-1914 வரை கலைவாணி கழகம் என்ற சங்கத்தைத் தோற்றுவித்து இவர்கள் அமைச்சராகி நடத்தினார்கள்; 1916ல் பத்தமடைச் சைவ சித்தாந்த சபையைத் தோற்றுவித்து சர் தி. நெ. சிவஞானம் பிள்ளையவர்கள், இராவ்சாகிப் வி. பூ. காந்திமதிநாத பிள்ளையவர்கள் முதலிய பெரியார் தலைமையில் 1917-1920 வரை ஆண்டு விழாக்கள் நடத்தினார்கள்; மேலைச்செவலில் சைவசித்தாந்த சபையைத் தோற்றுவித்துச் சாமி விருதை சிவஞான யோகிகள், மாணிக்கநாயக்கரவர்கள் தலைமையில் இரண்டு ஆண்டு விழாக்கள் நடத்தினார்கள்; கோவிற்பட்டியில் பத்தி விளை கழகம் திருவிடர் கழகம் இவைகளின் அமைச்சராகிப் பல ஆண்டுகள் நடத்தினார்கள்; 27—7—1924ல் கலைக்கழகம் (Culture Club) என்பது கண்டு அமைச்சராயிருந்தார்கள்; சிவாலய டணிவிடைச் சங்கம் ஆக்கித் தலைவராகி 2—9—1925ல் அரசியல் மந்திரி சர் சிவஞானம் பிள்ளையவர்கள் தலைமையில் ஆண்டு விழா நடத்தினார்கள்; சில நண்பருடன் கல்விக் கழகம் (Literary Association) அமைத்தார்கள்; நான்குநேரியில் சிவகாமி திருவருட் சங்கம் ஆக்கித் தலைவராகி இராவ்பகதூர் இலஞ்சி சி. ஈசுவரன் பிள்ளையவர்கள் தலைமையில் ஆண்டுவிழா நடத்தினார்கள்; 26—1—1937ல் கடையநல்லூர்க் கிருட்டிணபுரத்தில் சைவ முன்னேற்றச் சங்கம் கண்டு தலைவராயிருந்தார்கள்; 1941ல்சங்கரன்கோவில்

தமிழ்ச் சங்கத்தையும், 1942ல் கோவிற்பட்டி, சீவில்லிபுத்தூர்த் தமிழ்ச் சங்கங்களையும் அமைத்தார்கள்; பத்தமடை, கோவிற்பட்டி, நான்குநேரி, கடையநல்லூர் உயர் பள்ளி மாணவர் சங்கங்களின் தலைவராக 1914—1939 வரையும் ஆசிரியர் சங்கங்களின் அமைச்சராகப் பல ஆண்டுகளும் இருந்தார்கள்; சங்கரன் கோவில் உயர் பள்ளித்தமிழ் மாணவர் சங்கத்தின் தலைவராக இருந்துவருகிறார்கள்; திருநெல்வேலிச் சில்லா ஆசிரியர் சங்கத்தின் பொருளாளராக நான்காண்டுகள் 1937–38 முதல் இருந்து அதனைப் பதிவு செய்து செம்மையுற நடத்தினார்கள்; திருநெல்வேலிச் சில்லாப் பண்டிதர் சங்கத்தை நண்பர் பு. சி. புன்னைவனநாத முதலியாரவர்களோடு சேர்ந்து அமைத்தார்கள். சென்னையில் வண்ணார்பேட்டை நடராச சபையின் தலைவராக இவர்கள் 1933ல் இருந்தார்கள்; 1940ல் பிரம ஞான சங்கத்தின் உறுப்பினராகச் சேர்ந்தார்கள்.

## மாகாணச் சங்கங்களும் மாநாடுகளும்.

11—6—1934ல் திருவாளர்கள் மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள், பு. சி. புன்னவனநாத முதலியாரவர்கள், மு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் முதலிய பல பெரியாருடைய துணையை மேற்கொண்டு சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தை அமைத்து அதன் அமைச்சராகி நடத்திவருகிறார்கள். திருநெல்வேலி, சென்னை, தஞ்சை ஆகிய ஊர்களில் ஒன்பது மாகாணத் தமிழர் மாநாடுகளும், மூன்று புலவர் மாநாடுகளும், ஓர் இசை மாநாடும், திருக்குற்றாலத்தில் சாரல் மாநாடும் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் அமைச்சராகி நடத்தினார்கள். அச்சங்கத்தின் சார்பில் கலைச் சொல் மாநாடுகள் முதலிரண்டு திருநெல்வேலியிலும் மூன்றாவதும் அரங்கேற்று மாநாடும் சென்னையிலும் நடத்திக் கலைச் சொற்கள் என்ற நூலைப் பல பெரும்புலவர்களைத் துணைக்கொண்டு ஆக்கி, சென்னை, திருவிதாங்கூர்ப் பல்கலைக் கழகங்களின் பொருளுதவி பெற்றுப் பதித்துச் சென்னை அரசாங்கத்தாரின் ஆதரவையும் பாராட்டுதலையும் சங்கத்துக்குப் பெற்றார்கள்.

இவர்கள் 14–5–1932ல் மதுரையில் மாகாணப் பண்டிதர் மாநாட்டைக் கூட்டி அதில் தென்னிந்திய பண்டிதர் சங்கத்தைத் தொடங்கி அதன் அமைச்சராகி

1936ல் சேலத்திலும், 1937ல் தஞ்சாவூரிலும், 1938ல் மங்களூரிலும், 1939ல் சென்னையிலும், 1940ல் அம்பாசமுத்திரத்திலும் மாகாணப் பண்டிதர் மாநாடுகள் கூட்டினார்கள்; 1940ல் அம்பாசமுத்திரத்தில் நடைபெற்ற மாகாணக்கல்வி மாநாட்டின் பொருளாளராக இருந்தார்கள்.

## விரிவுரைகள்

இவர்கள் 1911 திசம்பரில் நடைபெற்ற கோவிற்பட்டிப் பத்திவிளைகழக ஆண்டுவிழாப் பேரவையிலேதான் முதன்முதலாக விரைவுரை நிகழ்த்தினார்கள். பின் அடிக்கடி கோவிற்பட்டி, பத்தமடை, தூத்துக்குடி, செவல், ஆத்தூர், திருநெல்வேலி, சங்கரன்கோவில்களில் விரிவுரைகள் புரிந்ததோடு ஆத்தூர், தென்காசி, குற்றாலம், சிதம்பரம், களக்காடு, குலசேகரன்பட்டினம், வள்ளியூர், காயற்பட்டினம் முதலிய இடங்களிலும் சென்று விரிவுரைகள் பல பொருள்கள் பற்றிப் பேசினார்கள்; 1116 தை முதல் 1117ளு தைமுடியச் சங்கரன்கோவிலில் திருவாசகவிரிவுரை நிகழ்த்தினார்கள்; 1924 திசம்பரில் சென்னைப் பல்கலைக்கழக மண்டபத்தில் நடைபெற்ற எல்லா இந்தியக் கீழ்த்திசை மூன்றாவது மாநாட்டில் (3rd Session of the All India Oriental Conference) சிலப்பதிகார காலத்தையும் புத்த நிர்வாண காலத்தையும் பற்றி விரிவுரை நிகழ்த்தி நிலைநாட்டியிருக்கிறார்கள்.

## நூலாசிரியர்

பள்ளிக்கூடப் பாடநூல்கள் — 28-6-1926ல் செய்யுட்டிரட்டும், 1932ல் 4, 5 வகுப்புக்களுக்குரிய இளைஞர் இலக்கண வினாவிடையும், 1933ல் 1, 2, 3 பாரங்களுக்குரிய இலக்கண வினாவிடையும், 1935ல் இளைஞர் தமிழிலக்கணமும், 1930ல் முறையே நான்கு ஐந்து பாரங்களுக்குரிய பைந்தமிழ் வாசகம் பகுதி 1ம், 2ம், அச்சாகி வெளிவந்து தமிழ் நாட்டிற் பரவின. முதலிரண்டாம் வகுப்புக்களுக்குரிய தமிழ் மணிவாசகமும், நீதிமாலையாகிய உலகநீதிக்கதைகள் ஆத்திசூடி நீதிக்கதைகள் என்பனவும் கையெழுத்துப்படிகளாகத் தயாராயிருக்கின்றன.

செய்யுள் நூல்கள் — இவர்கள் எட்டையபுரம் உயர் பள்ளியிற் படித்துக் கொண்டிருந்தபோது திருவாளர்கள் மாணிக்கஞ் செட்டியாரவர்கள் நல்லசிவன்

பிள்ளையவர்கள் என்ற இரண்டு புலவர்கள் கடுவிற்பட்டியில்இருந்தார்கள். இவர்கள் அவர்களோடு அடிக்கடி போட்டிபோட்டுப் பாடுவது வழக்கம். திரு. நல்லசிவன் பிள்ளையவர்கள் இரண்டடிகளும் அடுத்த இரண்டடிகள் தாமுமாகப் போட்டியிட்டுப் பாடிய **சாவித்திரி அகவல்** என்ற செய்யுள் நூல் கையெழுத்துப்படியாக இருக்கிறது. **சிங்கைப் பதிற்றுப்பத்தந்தாதி** எனத்தொடங்கிப் பாடிய முப்பது பாடல்களும், **பெரிய புராணமாலை** என்ற நூலின் சிறுபகுதியும் செந்தமிழ்ச் செல்வி என்ற மாதவெளியீட்டில் வெளிவந்தன. **இராமாயண அகவல்** என்ற இரண்டாயிரத்து நூற்றைந்தடிகளையுடைய செய்யுள் நூல் 1913 நவம்பர் மாதம் தொடங்கி 1914 திசம்பர் மாதமுடிய **விவேகபோதினி** என்ற மாதப்பத்திரிகையில் வெளிவந்து முற்றுப்பெற்றிருக்கிறது. 1914, 1915 ஆகிய இரண்டாண்டுகளிலும் முருகப்பெருமானைப்பற்றி நாடோறும் உண்பதன்முன் பாடிய ஐந்நூற்றைந்து வெண்பாக்கள் கையெழுத்துப்படியில் உள்ளன.

**உரை நடை நூல்கள்:**—பெரியபுராணத்தையும் தேவாரத்தையும் ஆராய்ந்து சுந்தரமூர்த்தி நாயனார் வரலாற்றைத் "**தம்பிரான்றோழர்**" என்ற தலைப்புடன் இவர்கள்எழுதிய நூலும், **திருவெம்பாவைக்குக் குறிப்புரையும்** வெளிவந்துள்ளன. **திருக்குறள் ஒழுக்கமுறை, சைவசமயம் உலகப் பொதுச்சமயம்** என்ற நூல்கள் 10—8—1933ல் எழுதிக் கையெழுத்துப்படியாக இருக்கின்றன. **ஐந்நூலி** என்ற நூல் 23—4—1933ல் எழுதப்பெற்றுத் **தமிழ்த்தாய்** என்ற முத்திங்கள் வெளியீட்டில் 1938ல் அச்சிடப்பெற்றுத் தனி நூலாகவும் வெளிவந்திருக்கிறது. 1929ல் வெளிவந்த **தெய்வமணம்** என்ற நூலுக்கும், வேறு சில சிறு நூல்களுக்கும் முன்னுரையும், 1099 பங்குனி 31உ வந்த **திருத்தேர்க் காட்சி** போன்ற துண்டு வெளியீடுகளும் அச்சாகி வெளிவந்துள்ளன.

**நாடகநூல்:**— கோவிற்பட்டிக் கல்விக்கழகத்தார் ஆடிய நாடகங்களில் 1926–28ல் கலந்து கொண்டதோடு பள்ளிக்கூடத்திற் படித்துக் கொண்டிருந்த காலத்தில் பல சிறுநாடகங்கள் ஆடியும் பாடியும், அரசர் என்ற பட்டம் பெற்ற எட்டையபுரம் மன்னரவர்கள் நாடகப்பேராசிரியர் கோவிந்தசாமிப் பிள்ளை முதலியவர்களைக்கொண்டு அதற்கென மிக்க பொருட் செலவில் அமைத்த நாடகமேடையில் ஆடச்செய்து பார்த்துப் பாராட்டி வந்த நாடகங்களை நாடோறும்

பார்த்தும் ஆய்ந்து வந்த பயிற்சியின் பயனாகக் "கிருட்டினகுமாரி" என்ற நாடக நூல் இவர்களால் யாக்கப்பெற்றது ; ஏறத்தாழ மூவ்வாயிரம் அடிகளையுடைய அகவற் பாவாலாகிய இந்நாடக நூல் 4-4-1914ல் தொடங்கப்பெற்று முற்றுப் பெற்றிருக்கிறது.

வரலாற்று நூல்:—இந்து அறநிலையக்காப்புக் கழகத்தார் ஆணைப்படி வெளி வந்துள்ள சங்கரநயினார்கோவில், மானூர், தென்காசி முதலிய ஊர்க்கோவில் களின் வரலாறுகள் இவர்களால் ஆராய்ந்து எழுதி வெளியிடப்பெற்றன.

## பத்திராசிரியர்

சென்னை மாகாணத்தமிழ்ச் சங்கம் வெளியிட்ட முத்திங்கள் வெளியீடாகிய "தமிழ்த்தாய்"க்கு இவர்கள் ஆசிரியராகி மூன்றாண்டுகள் இனிது நடத்திவந்தார் கள்; செந்தமிழ்ச்செல்வி, தமிழ்ப்பொழில், இந்தியன் போன்ற மாதவெளியீடு களுக்கும் குடியரசு, குமரன்போன்ற வாரவெளியீடுகளுக்கும் கட்டுரைகள் எழுதிப் போற்றினார்கள்.

## சமயக்கொள்கை

இவர்கள் சிறு பிள்ளையாகப் படித்துக்கொண்டிருந்த காலத்திற் காளி, மாரி, முதலிய சிறு தெய்வ வழிபாட்டில் ஈடுபட்டிருந்தார்கள். சீவில்லிபுத்தூரில் இராமாயணப்புலவரும் தமிழாசிரியருமாகிய அப்புவையங்காரவர்கள் கம்பர்இராமா யணத்தை முழுவதும் இரண்டுமுறை, இவர்களது நான்காவது வகுப்பாசிரியர் அரங்கநாத பிள்ளையவர்கள் வீட்டிற் படித்து விரித்துரைத்ததைக் கேட்டதன் பயனை வைணவப்பற்றுமிருந்து இவர்கள் இராமாயணத்தை அகவற் பாவாற்பாடி முடித்தார்கள். பின் எட்டாவது வகுப்பில் எட்டையபுரம் அரசர் உயர் பள்ளியிற் சேர்ந்ததுமுதல் தமிழாசிரியர் சீனிவாசையங்காரவர்கள் முருகப்பெருமானிடத்தில் அளவில்லாத பற்றுடையவராகி அப்பற்றினை மாணவரிடத்தும் வளர்த்த தன்மை யால் இவர்கள் வைணவப் பற்றினை யொழித்து முருகப்பத்தி மிகுந்து முருகனையே பாடி வழிபட்டு வந்தார்கள். 1914ல் தமிழாசிரியரான பின்புகூட 1916 வரை பத்தமடையில் என்னோடு சிவன்கோவிலுக்கு நாடோறும் தவறாது வந்தும் முருகனை மட்டும் வழிபட்டு வந்தார்கள். 1916ல் ஒருநாள் என்னுடைய வேண்டு

தலால் வேடிக்கையாகச் சிவபெருமான் திருமுன்பு வந்தது முதல் இவர்கள் திடீரெனச் சிவபெருமானுடைய திருவருள் நோக்கம் பதியப்பெற்றுச் சிவ வழிபாட்டை மேற்கொண்டு பத்தமடைச் சைவசித்தாந்த சபையை அமைத்து அதன் தலைவராகி, பழனியாண்டவர் பசனை மடத்தில் அச்சபையை நிறுவி,சிவபசனையின் இடையில் கோவிந்த நாம சங்கீர்த்தனம் கூறுவது பாவமான தகாத செயல் என்பதை விளக்கி வந்தார்கள்; அதனால் சுமார்த்தர்கள் சில போலிகளை ஏவிக் கலகம் விளைத்ததன் பயனாக மடத்தின் அக்தார்களைத் திருநெல்வேலி நீதிமன்றங்களில் வழக்கிடச்செய்து சைவ பசனைக்குரிய பழனியாண்டவர் பசனை மடத்தில் பசனையின்போது கோவிந்தநாம சங்கீர்த்தனம் சொல்லுவது கூடாதெனவும் அது கூறவேண்டுமென்பார் அம்மடத்தில் அடியெடுத்தும் வைத்தல் கூடாதென்றும் நீதிபதிகளிடம் தீர்ப்புப் பெறச்செய்தார்கள். சைவம் வைணவம், கிருத்தவம், மகமதியம் போலச் சுமார்த்தமும் ஒரு தனி மதம்,அதனை மேற்கொண்டிருப்பவர்களே சுமார்த்தர்களாகிய பிராமணர்கள், அவர்களைத் தமது குருக்களாகக்கொண்டு திருமணம், முதலிய சடங்குகளைச் சைவர்கள் நடத்துவது தகாது என்பதை இவர்கள் எடுத்துக்காட்டிப் பல விரிவுரைகள் செய்து அறிவுறுத்தி வந்தார்கள்.

தமிழ் மொழியே உலக மொழி, ஆரியம் முதலிய எல்லா மொழிகளும் அதிலிருந்து கிளைத்து வளர்ந்தனவே, தமிழ் மக்களே உலக முதன் மக்கள், ஏனைய மக்களனைவரும் தமிழரின் வழித்தோன்றல்களே, தமிழர்சமயமாகிய சைவசமயமே உலக முதற்சமயம், அதுவே உலகசமயம், திருக்குறளிற் கூறப்பட்டுள்ள நீதிகளே உலக நீதிகள் என்ற மெய்க்கொள்கைகளை உலகறியச்செய்து உலக ஒற்றுமை உண்டாகும்படி செய்வதையே இவர்கள் முழுநோக்கமாகக் கொண்டிருக்கிறார்கள்.

## ஒழுக்க நிலை.

உண்மையே உயர்வு, நல்லொழுக்கமே உயிருக்குப் காப்பு என்பதை உணர்ந்து இவர்கள் மனச்சான்றுப்படி நடக்கும் இயல்பினர். என்ன தொல்லை வந்தாலும் கொள்கையை விட்டுக் கொடுக்கும் இயல்பு இவர்களிடம் இல்லை. 1914 முதல் காப்பி, தேயிலை முதலிய எவ்விதக் குடியும் இவர்களிடம் கிடையா,

1922 முதல் வரம்பாக இவர்கள் வெற்றிலை போடுவதில்லை; 1930 முதல் சோடா வகைக் குடியினை அறவே விட்டுவிட்டார்கள்; பொடி முதலிய புகையிலைப் பொருள்களை எந்த நாளிலும் விரும்பியதில்லை. பள்ளிக்கூடப் பிள்ளைகள் யாவரையும் தமது குழந்தைகளைப்போலக் கருதி ஒழுக்கம்பெறக் கண்டித்து அன்பு பாராட்டும் தன்மையில் இவர்கள் சிறிதும் தவறியதேயில்லை. இவர்கள் சென்ற இருபத்தொன்பது ஆண்டுகளாகத் தமிழாசிரியராக இருந்துவருகிறார்கள்.

1924 கார்த்திகை மாதம் கடைசித் திங்கட் கிழமையன்று திருமகேந்திரப் பள்ளியில் தமது நண்பர் ஆடூர் வித்துவான் பெரியசாமிப்பிள்ளையவர்களோடும் உயர்திரு சிவசம்பு அடிகளோடும் இவர்கள் சென்று மனைவியாரோடும் சிவ தீக்ஷைகள் பெற்றுச் சிவபூசா துரந்தரராகத் திகழ்கிறார்கள். இவர்கள் தம்மோடு நெருங்கிப் பழகிய சில நண்பர்களை அவர்கள் உண்மைக்கு மாறாக நடந்ததனால் விட்டு விலகியிருக்கிறார்கள். 1937ல் சென்னைக் கலைச்சொல் அரங்கேற்று மாநாட்டுக்கு முன்னர் வந்த நோய்ப்பிணியிலும், 1943ல் ஒன்பதாவது மாகாணத் தமிழர் மாநாட்டுக்குச் சிலநாள் முன்னர் இரத்தம் கக்கி மயங்கி மண்டையுடைந்த பெருந் துன்பத்திலும் இவர்கள் உயிர்பிழைத்துச் சென்று அம்மாநாடுகளை நடத்தி வரும்படி செய்தது, உண்மை வெற்றிபெறும் பொருட்டு இறைவர் காட்டிய திருவருளே.

பத்தமடை, செவல், சேரன்மாதேவி, கோவிற்பட்டி இவ்விடங்களிலுள்ள சிவன் கோவில்களில் திருமதில்களிலும், சுற்றுக்களிலும் உள்ள செடிகொடிகளைக் கெல்லி எறிந்து பேணி எங்களோடு இவர்கள் சிவாலய பணிவிடை செய்து வந்தார்கள். துன்பமுறுவோர்க்கு உதவிபுரிவதிலும் இவர்கள் ஈடுபட்டவர்கள். 1919ல் பத்தமடை வில்வவனநாதர் திருக்கோவிலின் உட்கோபுர நடைவாயிலில் சிலம்பம் வல்ல சுமார் இருபது பட்டாணியர் கூடி எச்சிலுமிழ்ந்து அசுத்தப்படுத்தியதைக்கண்டு மனம் பொறாது, இரண்டாயிரம் மகமதியர் வீடுகளுடைய அவர்களுடைய துணைவலியையும் பொருட்படுத்தாது, சிவாபராதம் கண்டிருப்பது பெரும் பாவம் கண்டிருப்பதனினும் உயிர்விடுவதே பெரும் புண்ணியம் என்று துணிந்து இவர்கள் என்றோடு தனியே நெற்றிக்கம்பு தாங்கித் திருவருள் வல்லமைகொண்டு பாய்ந்து வந்து அவர்கள் அத்தனை பெயரையும் அடித்து வெருட்டித் துரத்திவிட்டார்கள். அவ்வூர் மகமதியத்தலைவர்களனைவரும் எங்களுக்கு நெருங்கிய நண்பர்கள்

அவர்களும் தம்மவர்செய்த பெரும்பிழையை வெறுத்ததோடு எங்களைப் பாராட்டி அப்பட்டாணியரை உடனே ஊரைவிட்டே அகற்றிவிட்டார்கள். அதுமுதல் இதுவரை மற்றவர் ஒருவரும் அந்த இடம் போகத் துணிவதே இல்லை.

## சைவப் பஞ்சாங்கம்

1917 திசம்பர்மீ 24, 25, 26ம் நாட்களில் கோவிற்பட்டியில் ஆங்கிலப் பேராசிரியர் பூரணலிங்கம் பிள்ளையவர்கள் தலைமையில் நடைபெற்ற பத்திவிளை கழக ஆண்டு விழாப் பேரவையின்போது தூத்துக்குடிச் சித்தாந்த ஆசிரியர் ந. சிவகுருநாத பிள்ளையவர்கள், பேட்டைப் புராணிகர் த ஆறுமுகநயினார் பிள்ளையவர்கள் முதலிய பேரறிஞர் "சுமார்த்தர்களின் பஞ்சாங்கத்தினாலும் புரோகிதத்தினாலும் சைவசமயக்கொள்கைகளும் விரதாதிகளும் திருவிழாக்களும் மறைந்து சுமார்த்தமயமாகிவருவதனால் சைவப்பஞ்சாங்கம் ஒன்று வந்தால்மட்டும் சைவப்பயிர் நிலைக்கும்" என வருந்தினர். அப்போது "அடுத்து வரும் சித்தார்த்தி ஆண்டில் சைவப்பஞ்சாங்கம் வெளிவரும்" என இவர்கள் திருவருளின் தூண்டுதலால் எடுத்தியம்பி அதன்படி முயன்று பத்தமடை ஆசிரியர் முத்துசாமிப்பிள்ளையவர்களைக் கூட்டிக்கொண்டு சைவப் பஞ்சாங்கத்தைச் சித்தார்த்தி ஆண்டு முதல் வெளியிட்டுவருகிறார்கள். இரண்டாண்டுகளில் முத்துசாமிப்பிள்ளையவர்கள் விலகிக் கொண்டார்கள். சுமார்த்தர்கள் சாந்திரமானிகள், சைவர்கள் சௌரமானிகள். இவ்வுண்மையை ஆகமப்பிரமாணங்களைக்கொண்டு எண்ணற்றதுண்டு வெளியீடுகளை வெளியிட்டும் பல பேரவைகள் கூட்டியும் நிலை நாட்டினார்கள். இதற்கு முதற் காரணம் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரும் சிறப்பாக அதன் தலைவர் திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்களும் அமைச்சர் திரு. திருவரங்கம் பிள்ளையவர்களும் உலையாதுமுயன்று உதவியதே. இரக்தாட்சி ஆண்டு முதல் கழகம் சைவப் பஞ்சாங்கத்தை வெளியிட்டு வருகிறது. சுமார்த்தப் பிராமணர்களுடையவும் அவர்கள் கூலிகளாகிய தன்னலப் போலிகளுடையவும் எதிர்ப்பினிடையே சைவப்பஞ்சாங்கம் வெற்றிபெற்று விளங்குகின்றது

## இதிகாச ஆராய்ச்சி (இராமாயணபாரதம்)

### சந்திரசேகரப்பாவலர்

இராமாயணபாரதக்கதைகளை தமிழ்மக்களுடைய தன்மான வாழ்வைக் கெடுத்து ஆரியரெனக்கூறிக்கொள்ளும் பிராமணப் புரோகிதருடைய அடிமை

ளாக்கி எருவன என்ற உண்மையை உணர்ந்து இராமாயணபாரத ஆபாசங்களை உலகறிய எடுத்தியம்பி உண்மையை நிலைநாட்டக் கங்கணங்கட்டி இலங்கை இந்தியர் சங்கத்தாரால் நடத்தப்பெற்று வந்த **இந்தியன்** என்ற மாதவெளி யீட்டில் 1923 ஜூலை 10ம்நாள் **இராமன் வரலாறு** என்ற கட்டுரையை இவர்கள் வெளியிட்டார்கள். 1927ல் கோவிற்பட்டிப் பகுத்தறிவு கழக ஆண்டுவிழாத் தலை வராக வந்த பெரியார் ஈ. **வே. இராமசாமி நாயக்கர**வர்கள் இதனைத்தெரிந்து குடியரசு என்னும் தமது வாரத்தாளில் தொடர்ந்து எழுதிவரும்படி வேண்டிக் கொள்ள "**இதிகாசங்கள்**" என்ற தலைப்பில் 25–12–1927 முதல் இராமயண ஆராய்ச்சி தொடர்ந்து வெளிவருவதாயிற்று. பாலகாண்டம் பதினைந்து கட்டுரை களோடு 22–7-1928ல் முற்றுப்பெற்றது. அயோத்தியா காண்டம் 26–8–1928ல் தொடங்கிப் பதினாறு கட்டுரைகளோடு 21—4—1929லும், ஆரணியகாண்டம் 5–5-1929ல் தொடங்கிப் பதினொரு கட்டுரைகளுடன் 18–8–1929லும், கிட்கிந்தா காண்டம் 25–8–1929ல் தொடங்கிப் பத்துக்கட்டுரைகளுடன் 27–10–1929லும், சுந்தரகாண்டம் 3–11–1929ல் தொடங்கிப் பதினைந்துகட்டுரைகளோடு 2–3–1930 லும், உயுத்தகாண்டம் 9–3–1930ல் தொடங்கிப் பத்தொன்பது கட்டுரைகளுடன் 20–7–1930லும் உத்தரகாண்டம் 3–8–1930ல் தொடங்கிப் பன்னிரண்டு கட்டுரைகளுடன் 9–11–1930லும் முற்றுப்பெற்றன. இவை முழுவதும் **சந்திரசேகரப்பாவலர்** என்ற பெயருடன் எழுதப்பெற்றன; தாய் வைத்த பெயர் **சந்திரசேகரன்** என்பது இங்ஙனம் வழங்குவதாயிற்று.

இராமாயாணத்தின் ஆபாசம் என்ற தலைப்பில் பாலகாண்டம் 12–2–1929ல் புத்தக உருவில் வெளிவந்தது. பின் இராமாயண ஆராய்ச்சி என்ற தலைப்பில் பாலகாண்டம் 1930லும், அயோத்தி காண்டம் 1931லும், ஆரணிய காண்டம் 1935லும், கிட்கிந்தாகாண்டம் 1936லும் வெளிவந்தன. தாள்விலை ஒன்றுபத்தாக இருந்ததோடு தாளை கிடைப்பது அருமையாக இருந்த 1942ல் சுந்தரகாண்டம், உயுத்தகாண்டம், உத்தரகாண்டம் என்ற மூன்று காண்டங்களும் வெளிவந்தன. குடியரசுப் பதிப்பகத் தலைவர் இராமசாமிப் பெரியாருடைய உலையா முயற்சியே இவ்வெளியீடுகளுக்கு அடிப்படை.

மகா பாரத ஆராய்ச்சி என்ற தலைப்பில் ஆதிபர்வம் 1-58 அத்தியாயங்கள் 30–11–1930ல் தொடங்கிப் பத்துக்கட்டுரைகளில் 5–4–1931வரை வெளிவந்தது.

இவர்கள் மாணவர் திரவியம் என்பார் சுயமரியாதைத் தொண்டன் என்ற வார வெளியீட்டில் "பணம் பிடுங்கிப் பார்ப்பனர்" என்ற தலைப்பில் 13-7-1929ல் தொடங்கித் திசம்பர் முடியப் பத்துக் கட்டுரைகள் வெளியிட்டார்.

## பாராட்டுரை.

தேசபத்தரும், தேசபக்தியைத் தமிழ் நாட்டில் முதல் முதலாக விதைத்த பெருந்தியாகியுமாகிய பேரறிஞர், ஒப்பற்ற புலவர், சுதேசிக் கப்பல் தலைவர், திருவாளர் வ. உ. சிதம்பரம்பிள்ளையவர்கள் தூத்துக்குடியிலிருந்து 5-4-1936ல் இவர்களுக்கு எழுதிய கடிதம் பின்வருவது :

அன்பார்ந்த தம்பியவர்களே

தாங்கள் சங்கரன்கோவிலிலிருந்து எழுதியனுப்பியகடிதத்தால், தங்களுக்கு அருமை மகன் பிறந்திருப்பதும், அவனுக்கு நம் தந்தையவர்கள் பெயரிட்டிருப்பதும் தெரிந்து பெரிதும் மகிழ்ந்தோம் நானும் தங்கள் மதினியும்.

நான்குநேரியிலிருந்து திருத்தப்பட்ட புரூபுடன் குறள் சம்பந்தமாகச் சிலகுறிப்புகளும் வினாக்களும் எழுதியனுப்பி யிருந்ததைப் பார்த்து அன்று முதல் இன்று வரையில் பேரானந்தம் அடைகின்றேன். "தம்பியுடையான் படைக்கஞ்சான்' என்னும் பழமொழியைப் பன்முறை கேட்டுள்ள நான் "அறிவுடைய தம்பியையுடையான் யார்க்கும் அஞ்சான்" என்று உணர்கின்றேன். இனித் திருக்குறளைப் பற்றி எப்புலவரும் எவ்வகையான குற்றமும் சொல்லமுடியாது என்று உணர்கின்றேன். வெறும் எழுத்துப்பிழை, அடையாளப் பிழைகளை மாத்திரம் திருத்துவதில் எனக்குத் திருத்தி யில்லை. தாங்கள் எடுத்துக் காட்டிய பிழைகளைத் திருத்துவதுதான் எனக்குத் திருத்தி. தங்கள் குறிப்புப்படியே முந்திய பாரத்தில் எல்லாத் திருத்தங்களும் செய்துள்ளேன். தங்கள் பெயரைத் தமிழுலகம் போற்றும்படியாகத் தங்கள் நன்றியை எடுத்து எழுதுவேன்.

தங்களன்புள்ள,

வ. உ. சிதம்பரம் பிள்ளை

## ஒரு படிப்பினை

இவர்கள் திருநெல்வேலிச் சில்லா ஆசிரியர் சங்கத்தின் பொருளாளராக நான்காண்டுகள் இருந்த காலத்தில் இச்சில்லா ஆசிரியரனைவரும் இவர்களுக்குச் சிறந்த நண்பராக இருந்தார்கள்; இவர்களுடைய தொண்டினை வானளாவப்புகழ்ந்தனர்; இவர்களுக்குச் சிலர் உயிக்குயிர் நண்பரும் ஆயினர். அம்பாசமுத்திரத்தில் நடைபெற்ற மாகாணக்கல்வி மாநாட்டில் சிலர், பிராமண ஆசிரியர், பொருள் பற்றிச் செய்த மோசடிகளை இவர்கள் தாமாகவும் தணிக்கையாளராலும் கண்டு திருத்த முயன்றும் பயன் பெறுமல் யாவருமறிய வெளிப்படுத்தும் நிலை வந்து விட்டது; பிராமண ஆசிரியரனைவரும், உயிர் நண்பராக இருந்தவரும், தம்மவர் பிழையை மறைக்க ஒன்று கூடிக்கொண்டு சீவைகுண்டத்தில் நடைபெற்ற ஆண்டுக்கூட்டத்தில் இவர்களை எதிர்த்து நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்து, பிராமணரல்லாதாராகிய அமைச்சரும், துணைத்தலைவரும் எதிர்த்தும்கூட, முன் ஏற்பாட்டின்படி நிறைவேற்றினர். சங்கத்துக்கு உரிய கட்டணம் செலுத்தாமல் உரிமையிழந்திருந்த கிளைச்சங்கப் பிராமண உறுப்பினரொருவரை அமைச்சராகவும் சேர்ந்தெடுத்தனர். தெய்வமே துணையெனக்கொண்ட இவர்கள் திருநெல்வேலி நீதிமன்றத்தில் அக்கூட்ட நிகழ்ச்சிகளை செல்லா வெனத்தக்க ஆதரவுகளுடன் வழக்குத் தொடரவே அவர்கள் சமாதானம் தேடினர். பகைவர் செய்யும் கேடுகளையும் உடனே மறக்கும் இயல்பினராகிய இவர்கள் மனமிசைய, அதன்படி நீதிபதியவர்கள் ஆண்டுக்தேர்வினை மட்டும் ஏற்றுக்கொண்டு நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை முற்றிலும் முறையற்றதெனத் தள்ளுபடி செய்து தீர்ப்பளித்தார்கள். இவ்வாறு செய்த பிராமண ஆசிரியர்களுடைய நிலைமை மற்றவருக்கு ஒரு சரியான படிப்பினையாகுமா? "பிராமணர் பிராமணரல்லாதார் என்ற பிளவும் பூசலும் ஒழியும் நாளே நம் நாடு வாழ்வுபெறும் நாள். அந்நாள் எப்போது வருமோ?" என இவர்கள் அடிக்கடி கடவுளை வேண்டிவருகின்றனர்

இவர்கள் மாகாணத் தமிழ்ச்சங்கம் ஆக்கிய சென்ற பத்து ஆண்டுகளாகப் "பிராமணர் பிராமணரல்லாதார், சென்னையார் வங்காளத்தார், இந்தியர் மகமதியர், இந்தியர் பிறநாட்டினர் என்ற வேற்றுமைகள் ஒழிந்து உலகமக்கள் அனைவரும் ஒரு தாய் வயிற்றுப்பிள்ளைகள்போல வாழவேண்டும்" என்று அடிக்கடி விரிவுரைகளிற் பேசிவருகிறார்கள். தன்னலம் காரணமாக ஒருவர் மற்றொருவரை ஏமாற்றுவதையும் தாழ்த்துவதையும் கொடுமைப் படுத்துவதையும் கண்டு

கண்டு உள்ளம் நெகிழ்கின்றார்கள். உலகத் தந்தையாகிய கடவுள் தமது தீய மக்களைத் துன்பப்படுத்தி நல்வழிப்படுத்தத் தவறார் என்பது உறுதி!

## சிவப்புக் கடுக்கன்

இவர்களுடைய தந்தையார் பிறருக்கு உதவி செய்வதையே தமது வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்டிருந்தவர்கள். தங்களுடைய மிக்க திறமையினாலும் உண்மையினாலும் எட்டையபுரம் சமத்தானத்தில், அது அரசாங்கப் பாதுகாவலில் இருந்த காலத்திலும்கூட, முன்னேறிப் பொறுப்பான பணியில் அமர்ந்து யாவரும் புகழ்ந்து பாராட்டும்படி நடந்துவந்தவர்கள்; அக்காலத்தில் எட்டையபுரம் ஆட்சியாளராக இருந்த சைவத் திருவாளர் அனவரதம் பிள்ளையவர்களுக்கு உகந்த தோழராகியிருந்தவர்கள். (உயர்ந்த பதவியிலிருந்த திருவாளர் அனவரதம் பிள்ளையவர்கள் அரசாங்க மந்திரியாக இருந்த சர் தி. நெ. சிவஞானம் பிள்ளையவர்களுடைய தமையனார்; இனம் தழுவுவதில் ஒப்பற்றவர். தம்மைத் தேடிவருபவர் தம் கைக்கீழ் உள்ள மிகச்சிறிய சேவகராக இருந்தாலும் உணவுண்ணும்போது காத்திருந்து கூடவைத்துத் தம் இலையிற் போலவே படைக்கச் செய்து இனியன பேசி உண்பிப்பதில் தலைசிறந்த புண்ணியவான்)

இவர்களுடைய தந்தையார் தமது சொந்தச் செலவில் தம் உறவினர் பலருக்குத் திருமணம் பேசி முடித்து வைத்தவர்கள் இன்றும் எட்டையபுரத்தில் அவர்கள் பெயர் புகழப்பெறுகின்றது அவர்களிடத்தில் அளவில்லாத பற்றும் மதிப்பும் உடைய இவர்கள் அவர்கள் அணிந்திருந்த சிவப்புக்கடுக்கனை இன்றும் அணிந்துகொண்டிருக்கிறார்கள்; சிவப்புக்கடுக்கன் இவர்களது ஆறாவது வயதில் அணியப்பெற்றது. அவ்வயதில் இவர்கள் தமது சிறிய தந்தையார் திருவாளர் கிருட்டின பிள்ளையவர்களுடன் பிடித்த படத்தில் இவர்களுடைய காதில் இக் கடுக்கன் விளங்குகின்றது. இது மிகவும் பழமையாகிக் கீறிப்போனதாயிருந்தும் தமது தந்தையாருடைய நினைவுக்காக இவர்கள் இதனை விடாது அணிந்து வருகின்றார்கள் இக்காலத்துப் பலர் தம்முன்னோர் முறையை விடுத்து முடி வெட்டு, காப்பிக்குடி, சட்டையுடை முதலிய மாறுதல்களுடன் தோன்றினாலும் இவர்கள் நடை, உடை, முடிகளில் தமது முன்னோர் முறையைச் சிறிதும் கைவிடாதவர்கள். கடுக்கனைப்போலவே இவர்களுடைய தந்தையார் முகம் பார்த்த கண்ணாடியும் எழுதிய மேசையும் இவர்களால் இன்றும் பொன்னேபோலப் பாதுகாக்கப் பெற்றிருக்கின்றன.

இவர்களுடைய மனைவியாரைப் பெற்ற தந்தையார் புல்வாய்ப்பட்டிக் கோபால்புரம் திருவாளர் ஆண்டியப்ப பிள்ளையவர்களும், வளர்ப்புத் தந்தை நெற்கட்டுஞ்செவல் கூடலூர் திருவாளர் சுந்தரம் பிள்ளையவர்களும் அவ்வப் பக்கங்களில் மிக்க புகழுடையவர்கள். இவர்களுடைய தாய்மாமனார் திருவாளர் சங்கரநாராயண பிள்ளையவர்கள் இப்போது தூத்துக்குடியில் பெரிய அஞ்சல் நிலையத் தலைவராகச் செல்வாக்குடன் விளங்குகின்றார்கள்.

## தொண்டருக்குத் தாய்வீடுகள்

தமிழ்த்தொண்டாற்றும் இவர்களுக்கு வீட்டுணவளித்துப்பேணி அருமை பாராட்டி வந்த புண்ணியர் - தலைவர் சிந்துபூந்துறை, சித்தாந்தப்பேராசிரியர், திருவாளர் மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள். திருநெல்வேலியில் ஆயத்த அணிகல அங்காடித் தலைவர் திருவாளர் மு. சுப்பிரமணியன் செட்டியாரவர் களுடைய சித்திவிநாயகராகமும் பாளையங்கோட்டையில் தமிழ்ப்பேராசிரியர் வித்துவான் திருவாளர் பூ. சி. புன்னைவனநாத முதலியாரவர்களுடைய புலவரக மும் கொக்கிரகுளத்தில் கணேசன் அச்சுக்கூடத் தலைவர் திருவாளர் சுடலைமுத்துப் பிள்ளையவர்களுடைய மாளிகையும் இவர்களுக்குத் தாய்வீடுகள். சென்னையில் தியாகராயநகர் சிங்கார முதலியார் தெருவிலுள்ள குருவிலாசத்தை நாம் மறக்கவே முடியாது. அதன் தலைவர் பச்சையப்பன் கலாசாலைப் பேராசிரியர் திருவாளர் அ. முத்தையாப் பிள்ளையவர்கள் எம். ஏ, ஆவர்; இவர்கள் சென்னையிற் புரிந்து வரும் தொண்டுகளுக்கெல்லாம் ஆதரவாக இருப்பன இப்பேராசிரியருடைய உணவுக்கொடையும் கூட்டுழைப்பும் பேரன்புமே.

## முடிவுரை

இவர்களை நான் நன்றாக அறிவேன்; இவர்களோடு பெரும்பாலும் உடனிருந்து இதிற்குறித்துள்ள நிகழ்ச்சிகளிற் கலந்துகொண்ட பேறுடையேன்; அதனாலேயே இவ்வரலாற்றை யான் எழுத முன்வந்தேன்.

இவர்கள் களங்கமில்லாத நெஞ்சினர்; தவறுகண்டவிடத்துக் கூசாமல் எடுத்தியம்பித் திருத்தும் நல்ல உள்ளத்தினர்; உண்மையைநிலை நாட்டவும், பிறரை ஏமாற்றுபவரது வஞ்சகத்தை வெளிப்படுத்தவும் ஒருநாளும் பின்வாங்கு வதில்லை; அதனாலேயே, சைவப்பஞ்சாங்கமும், இராமாயணபாரத ஆராய்ச்சியும் வெளிவந்தன. தங்களுக்குக் கேடுசெய்தவர்களிடமும் இவர்கள் பகைமை

பாராட்டிக்கொண்டிருப்பதில்லை; எல்லாரிடமும் இனிப்பாகப்பேசும் இயல்புடையவர்கள்; ஆனால் குற்றங்கண்டவிடத்துக் கடுமையாகப் பேசிவிடுவார்கள்.

“நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு”

“இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று” —திருக்குறள்

சாதி வேறுபாடு கிடையாது, சமயவேறுபாடு, கொள்கைவேறுபாடு பற்றி ஒருவரை ஒருவர் பகைப்பது அறிவுடையார் செயல் ஆகாது, உலகில் மக்களனைவரும் “தாம் கடவுளுடைய மக்கள், அதனால் யாவரும் உடன் பிறந்தவர்” என்று உண்மையுணர்ந்து வாழத்தொடங்கும்போது தான் உலகில் அமைதியும் மெய்யான இன்பமும் உண்டாகும், கோவில்களில் அருச்சனை புரியச் செய்தலும் புரோகிதரால் சடங்குகள் நடத்துவதும் தகாதசெயல்கள், ஒருவரை மற்றொருவர் தாழ்த்தி வாழ்வடைவது முடியாது, நம் உடலில் ஏதாவது ஓர் உறுப்புத் துன்புற்றாலும் உடலெல்லாம் துன்படைவதும், எல்லா உறுப்புக்களும் நோயற்றிருப்பதனால் உடல் முழுதும் இன்பமுறுவதும் போல உலகில் ஒருநாடு அடிமை நாடாகித் துன்புறும்போது பிறநாடுகளெல்லாம் எப்படியாவது துன்பமடையாமல் இருப்பது முடியாது, அடிமை நாடென்பதே இல்லாமல் எல்லா நாடுகளும் சம உரிமை பெற்றிருக்கும் காலமே உலகம் இன்புறும் காலம் என்பன இவர்களுடைய கொள்கைகள்.

வீண் செலவென்பது இவர்களிடம் காண்பது அருமை; கடன் வாங்குவதும், பிறருக்குக் கடன் கொடுப்பதும் கிடையா. இவர்கள் பிழைப்பு வேலைக்குப் போகும்போது மட்டும் இன்றியமையாத சட்டை முதலிய உடை யணிவார்கள்; பிறவேளைகளிலெல்லாம் வேட்டியும் துண்டுமே அணிவார்கள்; வாக்கினை எப்படியும் நிறைவேற்றுவார்கள். குன்றா ஊக்கத்தோடு சலியாமல் உழைத்துப் பல நன்மைகளைப் பலதுறைகளிலும் விளைத்துக்கொண்டிருக்கும் இவர்கள் நீடுழிவாழ எல்லாம் வல்ல பெருமானை வாழ்த்துகின்றேன்.

of which is given below.

CULTURE, PHILOSOPHY and ART; HISTORY, LITERATURE and LANGUAGE

## MEMBER SHIP:

The membership of the Conference is open to all lovers of Tamil.

**Membership fee.** The fee qualifying for a membership is Rs. 5/- only payable in advance to the General Secretary & Treasurer of the Conference, Mr. N. Chengalvarayan, Central College, Bangalore.

The fee for the membership of the Reception Committee is Rs. 3/- only.

Donors of Rs. 25/- and more will be classed as Patrons.

The Reception Committee now desires by this bulletin to offer a cordial invitation to all interested in Tamil and to lovers of Tamil to join the Conference and to give it their support, and also invite members to contribute papers, and those who wish to read papers at the Conference should send their papers in full, together with a short summary, to the General Secretary, Mr. N. Chengalvarayan, by the 15th of Oct. 41.

Excursions to places of Historical and Industrial interest in Bangalore will also be arranged. Free boarding and lodging will be provided for mofussil delegates.

All enquiries and correspondence should be addressed to the General Secretary of the Couference, Central College, Bangalore.

---